# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ்

மன்மத – பங்குனி – 2016 – மார்ச்

6.2.2016 அன்று நடைபெற்ற
கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக்குலேசன்
மேல்நிலைப் பள்ளியின் ஆண்டு விழா

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

மன்மத - பங்குனி - 2016 - மார்ச் இதழ் - 45

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய செளந்தர்",
7G. ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்

நீடாழி சூழ்உலகில் நிலையானதெய்வமே
நிகரிலாத் தெய்வம் நீயே
நிலையாதபொருள் எல்லாம் நிலையென்று நம்பியே
நிற்கின்ற மாந்தர் எல்லாம்
கூடாத வழியினில் ஆடாத ஆட்டங்கள்
கொஞ்சமா போடுகின்றார்
குறையாத பக்தியில் நிறைவாகவாழவே
கொஞ்சமும் எண்ணவில்லை
மாடாக மாறினார் மயங்கியே திரிகிறார்
மக்களாய் வாழவில்லை
மதியாத இவர்களை மதித்ததால் வாழ்க்கையில்
மகிழ்ச்சிநான் கண்டதில்லை
வாடாத சோலைவாழ் திருநெல்லை அம்மையே
வாவென்(று) அழைக்கிறோமே
வருகநீ திரிபுவனை வையகம் வாழவே
வந்தருள் புரிகுவாயே




காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

அச்சம் என்பது மனிதப்பண்புகளில் முக்கியமானது. எந்த ஒரு மனிதனும் முழுமையாக அச்சம் தவிர்த்தவனாக இருத்தல் அரிதினும் அரிது. ஆயினும் சாதாரண நிகழ்வுகளில், அன்றாட வாழ்க்கையில் அச்சம் தவிர்க்கப்பட வேண்டிய ஒன்று.

பாரதி தனது ஆத்திசூடியை "அச்சம் தவிர்" என்றே தொடங்குகிறான். மனிதனுக்கு இன்றியமையாத பண்பாக "அஞ்சாமை" இருக்க வேண்டும் என்பது பாரதியின் ஆணித்தரமான கருத்து. எனவே தான் "அச்சம் தவிர்" என்று தொடங்குகிறான். அதே போல "அச்சம் இல்லை அச்சம் இல்லை அச்சம் என்பது இல்லையே உச்சிமீது வானிடிந்து வீழுகின்ற போதிலும் அச்சம் இல்லை அச்சம் இல்லை அச்சம் என்பது இல்லையே" என்பது பாடல் விவேகம் உள்ளவன் வானம் இடிந்து வீழ்ந்தாலும் அது தன்னைத் தாக்குவதற்குச் சற்றே நேரம் எடுக்கும் அதற்குள் நாம் தப்பித்துக்கொள்ளலாம் என்று தைரியமாக நம்புவான், தப்பிக்க முயல்வான்; மேலும் இறை நம்பிக்கை கொண்டவன் தன் மீது வானம் வீழ வேண்டிய நியதி இருந்தால் வீழ்ந்தே ஆகும்; நம்மால் தடுக்க இயலாத ஒரு நிகழ்வைப் பற்றிக் கவலை கொள்வதோ அச்சம் கொள்வதோ மடமை என்றே கருதுவான்.

தெய்வப்புலவர் "அச்சம் கீழ்களது ஆசாரம்" என்று கடுமையாகச் சொல்கிறார். "அஞ்சி அஞ்சிச் சாவார் இவர் அஞ்சாத பொருள் இல்லை" என்பான் பாரதி. நெஞ்சில் உரமும் நேர்மைத் திறமும் நெறியல்லா நெறியில் ஏதும் வேண்டாக் குணமும் கொண்டவன் எதற்கும் அஞ்சத் தேவையில்லை. அஞ்சவும் மாட்டான். தன்னிறைவு பெற்ற தகைமையாளன், யாரிடத்தும் எதற்கும் கையேந்தா நிலை உடையவன், எதற்கும் அஞ்சத் தேவையில்லை. நடப்பது நடந்தே தீரும் என்ற உண்மையான திடமான நம்பிக்கை உடைய இறை அன்பன் அஞ்சுவதற்கு ஏதும் இல்லை. திருநாவுக்கரசுப் பெருமான்,

"நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலை அல்லோம்
ஏமாப்போம் பிணிஅறியோம் பணிவோம் அல்லோம்
இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை"
"அஞ்சுவதும் இல்லை, அஞ்ச வருவது யாதொன்றும் இல்லை"

"அச்சம் இல்லை நெஞ்சே அரன் நாமங்கள்
நிச்சலும் நினையாய் வினை போய்அற"

என்றும் பாடுவது அந்தப்பக்குவ நிலையே.

அச்சமோ சினமோ கொண்ட நெஞ்சம் நிம்மதியுடன் இருப்பதில்லை மனம், புத்தி சமநிலையில் தெளிவாக இருப்பதில்லை. எனவே சரியான முடிவுகள் எடுக்கப்படுவதில்லை. அச்சம் செயலைத் தடுத்து விடும், சாக்குத்தேடும். எனவே எச்செயலை / எந்த நல்ல காரியத்தைத் தொடங்க எண்ணினாலும் அச்சம் தவிர்த்து தெளிவாகச் சிந்தித்துத் திட்டமிட்டுச் செய்தல் வேண்டும்.

திருவள்ளுவர் "அஞ்சுவது அஞ்சாமை பேதைமை" என்றும் சொல்கிறார். பழி பாவத்திற்கு அஞ்சித்தான் ஆக வேண்டும்; மேலும் இது நம் கண்ணிற்கு, புத்திக்குத் தெளிவாகக் கேடு விளையும் என்று தெரிவனவற்றிற்கு அஞ்ச வேண்டும். ஓடும் இரயில் முன்னே விழுவது தைரியம் அல்ல; ஓடும் இரயிலில் ஏறுவதும் விவேகம் அல்ல. இது போன்ற தெளிவாகத் தெரிகின்ற விபரீதச் செயல்களுக்கு நாம் அஞ்ச வேண்டும். ஒருயிரைக் காப்பதற்காகத் தைரியமாக நாயைத்துரத்துவது / துட்டர்களை எதிர்த்துச் சண்டை இடுவதற்கு நாம் அஞ்சக் கூடாது.

தமிழ் மரபு போரில் வீரம், வாழ்வில் நேர்மை. போரில் இறந்தால் புகழ்; வென்றால் வெற்றிக்குரிய பயன். எனவே போரில் வீரம் காட்டுவது அச்சத்திற்கு அப்பாற்பட்டு இருக்க வேண்டும்.

நம் திருமடத்தில் ஐந்தாவது பட்டம், பெரும்புகழ் பெற்ற ஞானி தவத்திரு வீரப்ப சுவாமிகள், கொற்றவாளீஸ்வரர் கோயில் திருப்பணிகளில் ஈடுபட்டிருந்த நேரம், அவர் காலுக்கு அருகில் ஒரு பாம்பு படமெடுத்துக் கொண்டு நின்றதாம்; பக்கத்தில் நின்றவர்கள் பதறித்துடித்து "சாமி பாம்பு பாம்பு" என்று கத்தினார்களாம். அதற்கும் சுவாமிகள் சற்றும் கலங்காது காலம் வந்தால் கடிக்கும் என்றார்களாம். பாம்பு தரையில் தலையை அடித்துக் கொண்டு இறந்து விட்டதாம். அந்த அளவிற்குத் திட்டமான இறை நம்பிக்கை உள்ளவர்களுக்குப் பயம் எங்கிருந்து வரும். தேவையில்லாத பயத்தை - பதட்டத்தை உதறித்தள்ளி, செய்யவேண்டிய செயல்களைச் செம்மையாகச் செய்யுங்கள்.

மாணவச் செல்வங்களே ! பயம் சிறிதும் இன்றி, பதட்டம் ஏதும் இன்றித் தேர்வை எழுதுங்கள்; வெற்றி பெறுங்கள்.

***ஸ்ரீ சற்குருநாதன் துணை.***

## கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

### (தீர்த்த மகிமைப் படலம்)

கார்தவழ் மாமதில் சூழ்தரும்
சீர்மது ராபுரி ஆள்பவன்
வீரம்வி ராவிய தோளினான்
சூரதன் மாஎனும் பேரினான் 1

முடி(வு)இல் மகத்துவம் மேவுவெண்
பொடிஅணி வாஞ்சையன் எம்பிரான்
அடிமலர் போற்றும் அவர்க்(கு)உறும்
கொடியன தீர்க்கும் குணத்தினான் 2

துன்னலர் மோலிஇடறுகால்
மன்னவர் மன்னன்வ லியினான்
அன்னவன் இல்லற வாழ்க்கைசால்
நன்னர்ம டந்தைசு குணையே 3

பொற்பின்மி குந்தபொ லிவினாள்
கற்பில்மி குந்தக னங்குழை
வெற்பின்மி குந்தப ணிப்பிராற்(கு)
அற்பின்மி குந்தம னத்தினாள் 4

மருவு கொண்கன் பணியொடு
பொரு(ரு)இ லாச்சிவ பூசையும்
ஒரு(வு)இ லாதுசெய் உத்தமி
வெரு(வு)இல் வாழ்க்கையின் மேவுநாள் 5

கொடிய பாடண்டர் ஆகிய
நெடிய கார்அரு கந்தராம்
அடிகள் மார்கள் அணைந்தனர்
முடிகொள் மன்னவன் முன்றில்வாய் 6

சூர தன்மனைக் கண்டனர்
ஈர மென்மொழி கூறினர்
ஆர இந்திர சாலமாம்
பேர்கொள் வித்தைபி றக்கினார் 7

வேதசாத்திர சம்மத
நீதி யார்சைவம் நின்(று)அரசு
ஓது தம்மதத்(து) உட்புகும்
போதம் மேவப் புகட்டினார் 8

முன்செய் தீவினை ஆக்கத்தால்
பொன்செய் பூண்உடை மார்பினான்
மன்செய் பாதக வஞ்சர்சொல்
கொன்செய் அம்மதம் புக்கனன் 9

ஆறு சூடிஅ டிப்பணி
நீறு பூசுதல் கண்மணி
ஏறு மாலிகை இன்பமே
ஊறும் அஞ்செழுத்(து) ஓவினான் 10

வண்டு வார்குழல் பாகனார்
தொண்டு பூண்டவர் நேர்வரின்
கண்டு முட்டுக்கல் கலந்த(து)என்(று)
அண்டு சீற்றத்தால் அழலுவான் 11

நீட்டு செஞ்சடை நாதனை
வேட்டு நிற்பவர் என்றிடில்
கேட்(டு) முட்டுக்கிடைத்த(து)என்(று)
ஆட்டு கோபத்தின் ஆகுவான் 12

சுத்த மாமறை நிந்தைசெய்(து)
ஒத்த நால்வரு ணாச்சிர
மத்தை நீத்தவர் ஆகிய
பித்த ரோடுபி றங்குவான் 13

தங்கு மாதவப் பாண்டிநா(டு)
எங்கும் மாமயில் தோகையும்
பொங்கு பாய்உடைக் கோலமும்
அங்(கு)உ_ றாதும லிந்தவே 14

குண்டர் ஆயஅ மணர்கள்
கண்ட பாழியும் பள்ளியும்
மண்ட மற்(று)உள ஆலயம்
ஒண்த வக்குறை உற்றதே 15

அன்ன காலை அவன்மனை
என்ன மேவுசு குணைதான்
நன்னர் நெஞ்சில் மிகுதுயர்
மன்ன வெம்பிவ ருந்துவாள் 16

என்ன பாவம்இ யற்றினோம்
முன்னம் மேதகு சைவம்விட்(டு)
உன்ன ரும்சமண் மேவிநாம்
அன்னர் ஆகஅந் தோஅந்தோ 17

சிவ்பி ரான்அருள் செய்வ(து)என்(று)
அவம்வி ராவும் அமணொழிந்(து)
உவமைஇல் சைவம் சார்ந்துநாம்
தவம்வி ராவித் தலைப்பட 18

நன்று தீர்ந்த(து)இந் நாட்(டு)அகத்(து)
என்று வாடிமு கம்புலர்ந்து
ஒன்று பேர்இடர் தாங்கினாள்
தன்து ணைக்(கு)இது சாற்றுவாள் 19

உவள கத்(து)ஒரு நாள்இருந்து
அவன்அடிப் பணியா வையும்
தவ(று)அ றப்புரிந்(து) ஆயபின்
கவலை உற்(று)இது கூறுவாள் 20

என்உ யிர்த்துணை ஆகிய
மன்ன வாஇது கேள்மதி
முன்னம் ஆற்றிய தீமைசால்
அன்னர் பாடண்டர் ஆவரே 21

வேதமேபிர மாணம்மெய்ப்
போதமே சிவபூசைவே(று)
ஓத யாஉள பூதியே
சாத னம்பிறி(து) இல்லையே 22

ஆசை சூழ்உல(கு) ஆள்வதும்
ஆசை ஆதிஅ டைவதும்
ஓசை சூழ்உல கில்சிவ
பூசை யின்பயன் என்பரால் 23

ஆசை வெண்குடை சாமரை
மாசைஇன்(று) உயர் மாக்கள்இன்(று)
ஓசை சால்பிற வும்சிவ
பூசை யின்பயன் என்பரால் 24

தேசைமேவிய தேவர்தம்
ஓசை கூர்பதப் பே(று)எலாம்
ஈசை யாகத்(து) இயைசிவ
பூசை யின்பயன் என்பரால் 25

நீறு கண்மணி ஆகமம்
கூறு மாபுனைந்(து) ஒண்சிவப்
பேறு வாய்ப்புறப் பூசியா
மாறு பா(டு)உடை யார்எலாம் 26

நீண்ட காலம் இருப்பினும்
மாண்ட நீ(டு)உயிர்ப்(பு) எய்தலால்
ஆண்ட காற்றுத் துருத்தியும்
பூண்ட தாருவும் போல்வரே 27

பூதி பூசிப்பர் அசிஅச்
சோதிபூசைசெ யா(து)உண(வு)
ஆதி எய்தின ரேகரு
மேதிஆவர்வி சேடம்என் 28

வில்ள ரும்சிவ் பூசைசெய்(து)
எள்அ ரும்துதி செய்திலார்
வள்ளல் மன்னஇ ரண்டுகால்
உள்ள மாஎன்(று) உரைப்பரே 29

வானம் வேண்டினும் நான்முகன்
தானம் வேண்டினும் தார்க்கிய
யானம் வேண்டினும் மாதவ
மோனம் வேண்டினும் யாவரும் 30

கடிம லர்த்தொகை கைக்கொடு
முடி(வு)இல் பத்திமை பூண்டுமெய்ப்
பொடிஅ ணிந்தபு ராதனன்
அடிஅ ருச்சனை ஆற்றுவார் 31

இன்ன சைவம் ஒருவிநீ
துன்னு பாவச்ச மண்புகூஉ
என்ன காரியம் செய்தனை
மன்ன நீதிஇ(து) ஆகுமோ 32

தீய பாவச் சமண்எனும்
மாய மாம்சம யம்தழேல்
ஆய சைவத்து அடைந்துநீ
பாய மேன்மை படைஎன்றாள் 33

புனைய வல்ல சுகுணைதான்
இனையநீதி இயம்பவும்
மனையன் தீவினை ஆக்கத்தால்
முனைய அம்மதத் தேநின்றான் 34

தலைப றிப்பவர் சார்பினால்
நிலைகு லைந்(து)உயிர் நீத்தனன்
மலை(வு)இல் கற்பில்சு குணையும்
உலை(வு)இ லா(து)உடன் மாய்ந்தனள் 35

கற்பினில் சிறந்த அந்தக் காமரு சுகுணை என்பாள்
அற்பினில் சிறந்த முன்செய் அள(வு)இல்புண் ணியத்தி னாலே
பொற்பினில் சிறந்த மண்மேல் அகளங்க புரத்து வாழும்
அற்பினில் சிறந்த மன்னன் மகள்எனப் பிறந்தாள் அன்றே 36

தலைமயிர் பறிப்பார் சார்பில் சார்ந்(து)உயிர் விடுத்(து)உ ளானும்
நிலைகுலைந்(து) அளற்று மூழ்கி நெஞ்(சு)அழிந்(து) ஒழிந்து மண்மேல்
அலைபுனல் உடுத்த பண்ணைச் சாகல புரத்தை ஆளும்
மலைநிகர் புயத்து மன்னன் மகன்எனப் பிறந்தான் அன்றே 37

அகல்நிலம் வியக்கும் செல்வச் சாகல புரத்தை ஆள்வான்
மகன்எனப் பிறந்தும் பண்டு புரிந்தமா பாவத் தாலே
உகல்மிகு குட்ட நோயும் ஒழுகுநெய்த் தோரும் ஆய
இகல்மிகு பிணிகோள் பட்டான் வினைப்பயன் இரிவ(து) உண்டோ
38

இனையன்இவ் வாறு நோய்க்கோள் பட்(டு)அழிந்து இனையும் நாளில்
புனைஅக ளங்கம் காக்கும் புரவலன் மகட்கு மன்றல்
வினையது முடிப்பான் எண்ணிச் சுயம்வரம் விளங்கத் தீட்டி
வனையும்நல் முடங்கல் போக்கி மண்உல(கு) அறிவித் தானே 39

சுயம்வர முடங்கல் ஏற்றுத் தொடுகடல் உலகம் மேய
வயம்மிகு பற்பல தேயமன்னவர் குமரர் எல்லாம்
நயம்மிகு களிப்புத் துள்ள நால்வகைச் சேனைசூழ
இயம்மிகு தத்தம்ஊர்தி மேற்கொடு நெருங்க வந்தார் 40

அணைதர வந்தார் யாரும் அகளங்க புரத்தை அண்மி
இணைஇல் கல்யாண அம்பொன் மண்டபத்(து) இனிது இருந்தார்
பிணைஇல்சா கலவேந்(து) ஈன்ற குட்டியும் பேணி வந்து
கணைமருள் கண்ணாள் மன்றல் காணஓர் புறத்(து)இ ருந்தான் 41

அணவிய பல்லோர் நாப்பண் அணிமண மாலையோடு
மணவினைக்(கு) அமைந்த மங்கை மண்டபத்(து) ஊடுபுக்குப்
புணர்சிலைக் காமன் என்னப் பொலிபல குமரர் தம்மை
உணர்பவள் ஒருபால் குட்டி உறைவது கண்டாள் அன்றே 42

குட்டியைக் காண்ட லோடும் கோ(து)அறு ஞானத் தாலே
ஒட்டிமுற் பிறப்பில் வாய்த்த கணவன்என்(று) உணர்ந்தாள் அன்னான்
விட்டிடாப் போர்வை போர்த்து மெய் எலாம் புண்நீர்சோர
உள்திகழ் தலும்இ லானாய் உறைதரு திறனும் ஓர்ந்தாள் 43

முன்உறு பவத்துச் சேர்ந்தான் இவன்முழு நோய்க்கோள் பட்டான்
என்னினும் விடுவது உண்டோ எழுவகைப் பவத்தும் என்று
தன்உளம் மகிழ்ச்சி பூப்பத் தடங்கரத்(து)இருந்த மாலை
அன்னவன் கழுத்தில் இட்டாள் அனைவரும் நகைத்தார் அன்றே 44

*(தொடரும்...)*

## பொறுமையே பெருமை தரும்

(ம. கார்மேகம்)

இன்றைய காலச் சூழலில் எங்கும் எதிலும் வேகம். ‘வேகம் உன்னையும் கெடுக்கும்; உன்னைச் சார்ந்தவரையும் கெடுக்கும்’ என்று மு. வரதராசனார் கூறுவார். வாகனம் ஓட்டுநர் வேகம் காட்டுகிறார். இருசக்கர வாகனங்களில் செல்லும் இளைஞர்களிடையே வேகம். மனிதன் பாதுகாப்பாக நல்ல முறையில் பயணம் செய்வதற்காக அமைந்த வாகனங்கள் வேகமாகப் பறக்கின்றன. ‘மிதவேகம் மிக நன்று’ என்னும் அறிவிப்பைக் காணும்போது ஓட்டுநர் வேகம் காட்டுகிறார். வேகத் தடையைக் கடக்கும் போது தான் இருசக்கர வாகனத்தை ஓட்டும் இளைஞன் வேகம் கூட்டுகிறான். அந்த இடங்களில் வேகத்தைக் கட்டுப்படுத்தும் விவேகமும் பொறுமையும் அவர்களிடத்தில் இல்லை. விளைவு; விபத்தாகிறது.

சில குடும்பங்களில் பிரச்சினைகள் வருகின்றன. பிரச்சினை என்ற உடனேயே கோபம் சிலருக்கு வந்து விடுகிறது. பிள்ளை, மதிப்பெண் கூடுதலாகப் பெறவில்லை என்றால் தந்தைக்குக் கோபம் வந்து

விடுகிறது. சமையலில் சிறு குறை கண்டால் மனைவி மீது கணவன் கோபம் கொள்கிறான். மனைவிக்காகக் கணவன் பேசினால் தாய்க்குக் கோபம்; தாய்க்காக மகன் பேசினால் மனைவிக்குக் கோபம். இவ்வாறு வாழ்க்கையில் கோபப்பட்டே வாழ்க்கையை நரகமாக்கிக் கொள்பவர்கள் பலர் இருக்கிறார்கள்.

பிரச்சினை என்ன என்று கேட்டு அறிந்து முடிவு எடுக்கின்ற பொறுமை பலரிடத்தில் இல்லாததால் தான் வாழ்வையே பாழாக்கிக் கொள்கிறார்கள். தனக்குத் தீங்கு வரும்போதும் துன்பம் வரும்போதும் தன்மீது கோபம் கொள்ளாமல் பிறர் மீது குற்றம் சாட்டிக் கொள்கிறார்கள். இதனால் கூடி வாழும் மனப் போக்கையே சிலர் இழந்து விடுகின்றனர். 'தீதும் நன்றும் பிறர்தர வாரா' என்று எண்ணிவிட்டால் கோபம் கொள்ள மாட்டார்கள்.

மனிதன் பலரோடு கூடி வாழ வேண்டியவன்; வீட்டிலும் சரி, வீட்டைவிட்டு வெளியில் வரும்போதும் சரி; அவன் அனைவரையும் அரவணைத்துச் செல்ல வேண்டியவன். பிறர் மீது தேவையில்லாத கோபம் அவன் கொள்ளும் போது தீமைதான் விளையும். கோபம் என்ற உணர்ச்சிக்கு அடிமைப்பட்டவன் சிந்திக்கும் செயலை இழப்பதோடு எதையும் சரிவரச் செய்ய முடியாமல் தடுமாறுகிறான்.

தன்னுடன் பழகும் நண்பன் இடித்துரைத்தால் கோபம்; பெரியோர்கள் நல்லவற்றைக் கூறும்போது பொறுமையாய் அவற்றைக் கேட்கும் மனப்பான்மை இல்லாத வெறுப்பு; இவை ஒரு மனிதனைப் பாழாக்கிவிடும். நண்பன் என்ன சொல்ல நினைக்கிறான்; மற்றவர்கள் என்ன சொல்லப் போகிறார்கள் என்பதை அறிந்து கொள்ள ஆர்வமும் பொறுமையும் இருக்குமானால் அதுவே நன்மை தரும்.

தனக்குக் கோபம் உண்டாகக் கூடியவகையில் சிலர் பேசி விடலாம். அப்போதும் பொறுமை காக்க வேண்டும். ஒருவன் கொள்ளும் கோபம், அவனை மட்டும் அழிப்பதில்லை. அவனைச் சார்ந்தவரையும் அழித்து விடும்.

'சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி' என்று வள்ளுவப் பெருந்தகை கூறுகிறார். ஒருவன் தம்மை ஏசியபோது கூடப்

பொறுமையாக இருந்தார் கௌதம புத்தர். அதனால் தான் பெருமை கொண்டார்.

பெண் ஒருத்தி, திருமணமாகிப் புகுந்த வீடு செல்கிறாள். புதிய இடத்தில் உள்ள சூழல், உறவினர் போன்றவற்றைப் புரிந்து கொள்ள முயலும் போது அவசரமோ, வேகமோ கூடாது. பொறுமையில்லாமல் அவசரப்பட்டுப் புகுந்த வீட்டுச் சூழலைத் தவறாகப் பேசிவிட்டால் வாழ்வு வீணாகிவிடும். எனவே அச்சூழ் நிலையைப் புரிந்து கொள்ளப் பெண்ணுக்குப் பொறுமை வேண்டும். அதனால் தான் பொறுமை என்னும் நகையணிந்து பெண்கள் பெருமை கொள்ள வேண்டும் என்றனர்.

பாண்டவர்கள் தங்களுக்குப் பலதுயரங்கள் வந்தபோதும் பொறுமை காத்ததால் தான் இழந்த பூமியைத் திரும்பப் பெற்று ஆட்சி புரியும் பெருமையைப் பெற்றார்கள். தேவையில்லாத பொறாமையும், அதனோடு கோபமும் கொண்டு வாழ்ந்த கௌரவர்கள் அழிய நேரிட்டது. அதனால் தான் பொறுத்தார் பூமியாள்வார்; பொங்கினார் காடாள்வார் என்றனர். சிலுவையில் அறைந்த போதும் பொறுமை காத்ததால்தான் ஏசுநாதரைத் தெய்வமாக அனைவரும் வணங்க நேரிட்டது. கண்ணகியின் பொறுமை தான் அவளுக்குப் பெருமை சேர்த்தது.

தனக்கு ஒருவர் தீங்கே செய்தாலும் அந்தத் தீங்கு செய்தவரிடமும் பொறுமை காட்ட வேண்டும் என்று சான்றோர் கூறுவர். தீங்கு செய்தவரைத் தண்டிப்பதால் கிடைப்பது ஒருநாள் மகிழ்ச்சி தான்; ஆனால் அவருக்குத் தீங்கு செய்யாமல் பொறுத்துக் கொள்வதே புகழ் தரும் என்றனர். ‘பகைவனுக்கும் அருள்வாய்’ என்றார் பாரதி.

நட்பில் பொறுமை, நட்பின் பெருமையைக் கூட்டும்; வாழ்வில் பொறுமை இருந்தால் குடும்பத்திற்குப் பெருமை; வேகமும் கோபமும் இல்லாமல் நிதானத்தையும் பொறுமையையும் கடைப் பிடிப்பவன் தான் பெருமை கொள்கிறான்.

பொறுமை காப்போம் ! பெருமை சேர்ப்போம் !

45

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

### பட்டினத்தார்

சித்தர் வரிசையில் ஒரு பட்டினத்தாரையும் பட்டினத்துப் பிள்ளையார் என்று ஒருவரையும் குறிப்பிடுகின்றனர். தனக்கு அப்பாற்பட்ட ஒன்று என ஏதோ உள்ளது. அது என்ன ? அதன் ஆற்றல் எத்தகையது? அதை எப்படிக் காணலாம் என்ற வேட்கை உள்ளத்தில் எழும் போது அவன் அதனை அறிய முயல்கிறான். மனத்தை ஒன்றுபடுத்தி அவன் நிலையானதவத்தைச் செய்யும் போது அவன் அது என்னவென்பதை அறிந்து கொள்கிறான். இவ்வாறு ஆத்மஞானம் பெற முயலும் ஞானியின் முன்னர் தோன்றுகின்ற பேரொளிப் பிழம்பு அவனுக்குப் புரியாமல் இருந்த பலவற்றைப் புரிய வைக்கின்றது. ஒருருவம் ஒருநாமம் இல்லாத மெய்ப்பொருளை உயரிய உயிர்ப்பாற்றலை அவன் அறிய முயல்வதற்கான கால நீட்சி என்று முடியும் ? என்பதை அறிய இயலாமல் ஞானத்திலேயே மூழ்கி விடுகிறான். அனைத்திற்கும் மேலாக இருந்து இந்தப் பிரபஞ்சத்தை இயக்கிக் கொண்டிருக்கும் அது இன்னதென்று அறியும் பக்குவம் அவன்பால் வரும்போது அவன் அனைத்தும் அறிந்தவன் ஆகிறான். இப்படி அறிந்த ஞானியரே சித்தர்கள். கால வெள்ளத்தைக் கடந்து ஊழி வரினும் தான் பெயராத் தன்மை உடையவர் ஆகின்றனர்.

இப்படிப்பட்ட ஞானியர்கள்தாம் யாதும் ஊரே யாவரும் கேளிர் என்று எண்ணி அனைத்து உலகையும் வலம் வந்தவர்கள்; அட்டமா சித்திகள் அனைத்தையும் பெற்றவர்கள். மாளிகையும் மண் குடிசையும் அவர்களுக்கு ஒன்றுதான். பற்றைத் துறப்பவன் தான் ஞானி; பற்றை எளிதிலே துறக்க இயலுமா ? எனில் இயலாது என்பதே விடையாக இருக்கும். அனைத்தையும் துறந்த பட்டினத்தாருக்கே அப்படி ஒரு சோதனை வந்தது; அதுவும் ஏதும் அறியாத பாமரப் பெண்டிரால் வந்தது.

ஒரு நாள் பட்டினத்தார் கடுமையான வெய்யில் வேளையில் ஒரு மரத்தின் நிழலில் கீழே படுத்துச் சற்றுக் கண்ணயர்ந்தார். அப்பொழுது அங்கு வந்த இரு பெண்களில் ஒருத்தி அதோ ! பாரடி ! சாமியாராய்

இருக்கின்ற இந்தச் சந்நியாசிக்குச் சுகமாகப் படுத்துறங்க நிழல் வேண்டி இருக்கிறதே என்று சொல்லிக் கொண்டு போனதைப் பட்டினத்தார் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்து அப்பால் புறப்பட்டார். மற்றொரு நாள் ஒரு வரப்பில் தலை வைத்துப் படுத்திருந்தார். அப்பொழுது அங்கு வந்த அதே பெண்களில் ஒருத்தி அதோ ! பாரடி ! தலைக்குச் சுகமாகச் சாமியார் வரப்பிலே தலைவைத்துப் படுத்திருப்பதை என்றாள். இது கேட்ட பட்டினத்தார், அவர்கள் சொல்வதே சரி; முற்றும் துறந்த தனக்குச் சுகம் தேவை இல்லையே என்று எண்ணித் தன் கையைத் தலைக்குக் கீழே வைத்துக் கொண்டு படுத்திருந்தார். திரும்பி வந்த பெண்கள் இதோ ! பாரடி ! சாமியார் தன் கையைத் தலைக்கு வைத்துக் கொண்டு படுத்திருப்பதை என்றாள். இதைக் கேட்ட பட்டினத்தார் நமக்கு எப்படித் தோன்றுகிறதோ அப்படிச் செய்வதே சரி. உலகம் பல சொல்லும்; நமக்குச் சரியெனப்பட்டதை நாம் செய்ய வேண்டும் என்று தன் வழியில் சென்றார். உலகம் வாழ்ந்தாலும் ஏசும். தாழ்ந்தாலும் ஏசும்; அதனால் தான் சித்தர்கள் காடுறை வாழ்க்கையை மேற் கொண்டனர். ஆளரவம் இல்லாத இடங்களில் தங்கள் தவங்களைச் செய்தனர். கொடிய விலங்குகள் கூட அவர்களைத் துன்புறுத்தவில்லை. தோற்றத்தில் கவனம் கொள்ளாதவர்களாய் உலக மாந்தர் நன்னெறி பற்றி ஒழுகுதல் வேண்டும் என்ற குறிக்கோளை மேற்கொண்டு அவர்கள் உடல் நலத்துடன் வாழ்வதற்கான வழிமுறைகளையும் கண்டறிந்தவர்கள். சனாதன வாதிகள் சொல்கின்ற சடங்கு முதலான சம்பிரதாயங்களைச் சாடியவர்கள். சிவம் என்பதே செம்பொருள்; இதனை உணர்ந்த மாந்தர்களே யாக்கை நிலையாமையை உணர்ந்து தம் பொறிகளை அடக்கி மூலாதாரத்தை இயக்கிச் சோதியில் கலக்க முனைவர். இதுதான் சித்தர்கள் கண்ட வழி. தெய்வம் உண்டென்றிரு அதுவும் ஒன்றென்றிரு என்பது தான் அவர்கள் நமக்கு உரைத்த நெறி; மெய்யான மெய்ப்பொருள் உணர்வு அதுவே.

சித்தன் என்பவன் பேய்போல் திரிந்து இட்ட பிச்சைகளை நாய்போல் அருந்தி உயிர்களுக்குத் தாய் போலும் தாயர்களுக்குச் சேய் போலவும் வாழ்ந்தவர் பட்டினத்தார். உலக வாழ்க்கையின் அவலத்தை நமக்குத் தெளிவாக விளக்கவே அவர் உடற் கூற்று வண்ணம் பாடினார். இது நம்மைப் பற்றி நம்முடைய வாழ்க்கைப் படிகளை உய்த்துணர வைப்பது.

அவர் பாடிய கோயில் திரு அகவல் குறித்து முதலில் காணலாம். கோயில் என்றாலே அது சிதம்பரத்தைக் குறிக்கும். உலக வாழ்க்கை பொய் வாழ்க்கை. அதனை வேண்டி மயங்காதே. பிறந்தவை இறப்பதும் இறப்பவை பிறப்பதும் தொடர் நிகழ்வுகள். பெருத்தவை சிறுக்கும்; சிறுத்தவை பெருக்கும். இவையெலாம் அகற்ற இயலாத நிகழ்வுகள். உணர்விருப்பின் மறதியும் வரும்; மறதி உண்டாகும் போதுதான் உணர்வும் உண்டாகும். சேர்க்கை இருப்பின் பிரிவும் இருக்கும். பிரிவு இருப்பின் சேர்க்கை இருக்கும். மகிழ்ச்சிக்கு உரியன வெறுப்பாக மாறுதலும் வெறுப்பாக உள்ளன மகிழ்ச்சிக்குக் காரணமாக அமைதலும் இயற்கை. இறைவா உன்னைப் போற்றினாரை நீ போற்றினாய். நீ அனைத்திலும் கலந்து இருந்தாய் ! இளமை, மூப்பு, பிறப்பு, இறப்பு, மகிழ்தல், வருந்துதல், களித்தல், வெறுத்தல், வறுமை, செல்வம், சொர்க்கம், நரகம், இன்பம், துன்பம் ஆகிய அனைத்துமாக நீ இருக்கின்றாய். நீ இன்றி ஏதுமில்லை உன்னால் தரப்பட்ட உடல் நல்வினை தீவினை என்னும் இரு வினைகளுக்கு இடமான கூடு. உலகம் இவ்வுடலைக் கல்லினும் வலிதென்று நம்பிற்று. இது பீளையும் நீரையும் உண்டாக்கும் ஒரு கருவி. உமிழ் நீரும் கோழையும் ஒழுக்கிக் கொண்டிருக்கும் ஒரு கருவி; நீரும் மலமும் நிறைந்த உடம்பு உள்ளே தொடங்கி வெளிவரை நாறும் ஒரு பொறியாகும்.

இப்படிப்பட்ட உடலுடன் வாழும் வாழ்க்கையை உறுதி என்று நம்பாமல் முடிவில் சுட்டு எலும்பும் சாம்பலும் ஆகின்ற நிலையை உணர்ந்து கொன்றை சூடிய கடவுளை அழியாத சிவ போக இன்பத்தை நான் எனது என்கின்ற நினைவு அகற்றி இருவினைக் குற்றங்கள் நீங்கி, போக்கும் வரவும் என்ற இருள் அறவே நீங்க உலக நினைவு நீங்க இரவும் பகலுமாக உலகத்து இன்பம் அகல ஒரு முதல்வனாய் நிற்கின்ற தில்லைக்கண் தோன்றிய சோதி வடிவான கடவுளை அம்பலத்தாடியை ஆநந்தக் கூத்தனை நெருப்பிலே உருகுகின்ற அரக்கைப் போல் மனம் உருகித் திருச்சிற்றம்பலத்தில் ஒளிரும் நம் சிவபெருமானை மனமே நினையுங்கள். சிவபெருமானைச் செம்பொன் அம்பலத்தானை மனமே நினைமின் நினைமின் என்று பாடும் பட்டினத்தாரின் கோயில் திரு அகவலின் முதற்பகுதியைக் கீழே காண்க.

## கோயில் திரு அகவல் - 1

நினைமின் மனனே நினைமின் மனனே
சிவபெரு மானைச் செம்பொன் அம்பலவனை
நினைமின் மனனே நினைமின் மனனே
அலகைத் தேரின் அலமரு காலின்
உலகப்பொய் வாழ்க்கையை உடலை ஓம்பற்க
பிறந்தன இறக்கும் இறந்தன பிறக்கும்
தோன்றின மறையும் மறைந்தன தோன்றும்
பெருத்தன சிறுக்கும் சிறுத்தன பெருக்கும்
உணர்ந்தன மறக்கும் மறந்தன உணரும்
புணர்ந்தன பிரியும் பிரிந்தன புணரும்
அருந்தின மலமாம் புனைந்தன அழுக்காம்
உவப்பன வெறுப்பாம் வெறுப்பன உவப்பாம்
என்றிவை அனைத்தும் உணர்ந்தனை அன்றியும்
பிறந்தன பிறந்தன பிறவிகள் தோறும்
கொன்றனை அனைத்தும் அனைத்தும் நினைக்கொன்றன
தின்றன அனைத்தும் அனைத்தும் நினைத்தின்றன
பெற்றன அனைத்தும் அனைத்தும் நினைப்பெற்றன
ஓம்பின அனைத்தும் அனைத்தும் நினைஓம்பின
செல்வத்துக் களித்தனை தரித்தரித்து அழுங்கினை
சுவர்க்கத்து இருந்தனை நரகில் கிடந்தனை
இன்பமும் துன்பமும் இருநிலத்து அருந்தினை
ஒன்றொன்று ஒழியாது உற்றனை அன்றியும்
புற்புதக் குரம்பையைத் துச்சில் ஒதுக்கிடம்
என்னநின்று இயங்கும் இருவினைக் கூட்டைக்
கல்லினும் வலிதாக் கருதினை இதனுள்
பீளையும் நீரும் புறப்படும் ஒருபொறி
மீளும் குறும்பி வெளிப்படும் ஒருபொறி
சளியும் நீரும் தவழும் ஒருபொறி
உமிழ்நீர் கோழை ஒழுகும் ஒருபொறி
வளியும் மலமும் வழங்கும் ஒருபொறி
சலமும் சீயும் சரியும் ஒருவழி

உள்ளுறத் தொடங்கி வெளிப்பட நாறும்
சட்டகம் முடிவில் சுட்டெலும் பாகும்
உடலுறு வாழ்க்கையை உள்ளுறத் தேர்ந்து
கடிமலர்க் கொன்றைச் சடைமுடிக் கடவுளை
ஒழிவரும் சிவபெரும் போக இன்பத்தை
நிழலெனக் கடவா நீர்மையொடு பொருந்தி
எனதற நினைவற இருவினை மலமற
வரவொடு செலவற மருளற இருளற
இரவொடு பகலற இகபரம் அறஒரு
முதல்வனைத் தில்லையுள் முளைத்தெழுஞ் சோதியை
அம்பலத்து அரசனை ஆநந்தக் கூத்தனை
நெருப்பினில் அரக்கென நெக்குநெக்கு உருகித்
திருச்சிற் றம்பலத்து ஒளிரும் சிவனை
நினைமின் மனனே நினைமின் மனனே
சிவபெரு மானைச் செம்பொன் அம்பலவனை
நினைமின் மனனே நினைமின் மனனே

*(தொடரும்...)*

## மடாலய நிகழ்வுகள்

28.02.2016 அன்று காரைக்குடி ஸ்ரீமத் சோமசுந்தர ஞான தேசிகர் குருபூசையும்

04.03.2016 அன்று நல்லூர் பழனி முருகன் ஐயா குருபூசையும் நடைபெற்றன.

17.02.2016 அன்று நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியில் ஆங்கிலத் துறை மன்ற நிறைவு விழா நடைபெற்றது. அழகப்பா பல்கலைக்கழக ஆங்கிலத் துறைப் பேராசிரியர் டாக்டர்.பி. மதன் சிறப்புரை ஆற்றினார்.

18.02.2016 அன்று கணினியியல் துறை சார்பாக Inter Collegiate Technical Competition - (Intellect Programme) நடந்தது. அழகப்பா பல்கலைக்கழகப் பேராசிரியர் பத்மபிரியா நிகழ்வினைத் தொடங்கி

வைத்தார். பேராசிரியை K. கலா வரவேற்புரை நிகழ்த்தினார். சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் மாணவர்களுக்குப் பரிசுகள் வழங்கினார்.

22.02.2016 அன்று கோயிலூர் மடாலய வளாகத்தில் பனை ஓலைப் பயிற்சி முகாம் தொடங்கியது. சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் ஆசியுரை வழங்கினார். இலக்கியச் செல்வர் டாக்டர் குமரி அனந்தன் நிகழ்ச்சியைத் தொடங்கி வைத்தார். முன்னாள் நபார்டு வங்கி மேலாளர் திரு. கண்ணப்பன் முதலானோர் வாழ்த்துரை வழங்கினர். டாக்டர்.சே. குமரப்பன் வரவேற்புரை நிகழ்த்தியதுடன் நன்றியுரையும் கூறினார். இப்பயிற்சி முகாம் 02.03.2016 வரை நடைபெற்றது.

27.02.2016 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் புதுக்கோட்டை அரசு மேல்நிலைப் பள்ளி முதுநிலைத் தமிழ் ஆசிரியை திருமதி.ம. உஷாராணி, திருநீலநக்கர் நாயனார் பற்றிச் சொற்பொழிவாற்றினார்.

28.02.2016 அன்று மடாலய வளாகத்தில் திருக்குறள் முற்றோதல் நிகழ்வு நடந்தது. சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள், காப்பியக் கவிஞர். நா.மீனவன், திருக்குறள் கழக உறுப்பினர்கள் மற்றும் மாணவர்கள் திரளாகக் கலந்து கொண்டனர்.

02.03.2016 முதல் 08.03.2016 வரை நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியின் சார்பில் நாட்டுத் தொண்டுத் திட்ட முகாம் கோவிலூர்க் கிராமத்தில் சிறப்பாக நடைபெற்றது. 02.03.2016 அன்று சுவாமிகள் தலைமையில் முகாம் தொடங்கப் பெற்றது. அழகப்பா பல்கலைக்கழக நாட்டுத் தொண்டுத் திட்ட ஒருங்கிணைப்பாளர் டாக்டர்.சு. ராசாராம் முகாமைத் தொடங்கி வைத்தார். முனைவர் சே. குமரப்பன் சிறப்புரை ஆற்றினார். ஊராட்சி மன்றத் தலைவர் தி.ராம. அழகப்பன், கிராம நிர்வாக அலுவலர் பி. சிவகுமார் ஆகியோர் வாழ்த்தினர். கல்லூரி முதல்வர் பா. செல்லப்பா அனைவரையும் வரவேற்றார்.

அடுத்த அடுத்த நாள் நிகழ்வுகளில் முனைவர்.பி. ரவீந்திரன், பேரா.ம. கார்மேகம், பேரா.எஸ். நடராசன், திருமதி.எல். மணிமொழி

முருகன், டாக்டர்.கே. கண்ணத்தாள், பேரா. சௌமியா, பேரா.எம். சீதாலெட்சுமி, திரு.ஏ.எல். ராமசாமி, டாக்டர்.ஆர்.ரவீந்திரன் எம்.பி.பி.எஸ், டாக்டர்.வி. உஷா ஸ்ரீதர் எம்.பி.பி.எஸ், திரு.எஸ்.எஸ். சுப்பிரமணியன், திரு.எம். இராமபாண்டியன், திரு.கே.ஆர். மணி, பேரா.ஆர். மாயாண்டி, பேரா.கே. கலா, பேரா. மங்கையர்க்கரசி ஆகியோர் கலந்து கொண்டனர்.

முகாம் நிறைவு விழா சுவாமிகளின் ஆசியுடன் நிகழ்ந்தது. முனைவர்.பா. செல்லப்பா வரவேற்புரை ஆற்றினார். திட்ட அலுவலர் பேராசிரியை கஸ்தூரி, முகாம் அறிக்கையை வாசித்தார். டாக்டர்.சே. குமரப்பன் சிறப்புரை ஆற்றினார். பேரா.எஸ். ஜெயராஜ் நன்றி நவின்றார். அறுபதுக்கும் மேற்பட்ட மாணவ மாணவியர் பங்கு கொண்ட இந்த முகாமில் கோயிலூர்க் கிராமப் பகுதியில் பல சுற்றுப்புறத் தூய்மைப் பணிகள் நிறைவேற்றப் பெற்றன.

07.03.2016 அன்று கலை அறிவியல் கல்லூரியில் மகளிர் தின விழா கொண்டாடப்பெற்றது. முதல்வர்.பா. செல்லப்பா தலைமையில் நடைபெற்ற விழாவில் கணினியியல் துறைத் தலைவர் K. கலா வரவேற்புரை நிகழ்த்தினார். வணிகவியல் துறைத் தலைவர் M. சீதாலெட்சுமி நன்றி கூறினார். நிகழ்ச்சியில் அழகப்பா பல்கலைக்கழக மகளிரியல் துறையின் முன்னாள் தலைவர் டாக்டர்.ரெஜினா பாப்பா உரையாற்றினார்.

09.03.2016 அன்று கலை அறிவியல் கல்லூரியின் ஆண்டுவிழா சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் ஆசியுடன் நடைபெற்றது. அழகப்பா பல்கலைக்கழகப் பதிவாளர் (பொறுப்பு) டாக்டர்.வி. பாலசந்திரன் சிறப்புரை வழங்கி மாணவர்களுக்குப் பரிசுகளும் வழங்கினார். பேராசிரியை K. கலா அனைவரையும் வரவேற்றார். முதல்வர் பா. செல்லப்பா ஆண்டறிக்கை வாசித்தார். பேராசிரியை சீதாலெட்சுமி விருந்தினரை அறிமுகம் செய்தார். பேராசிரியை மங்கையர்க்கரசி பரிசுப் பட்டியல் வாசித்தார். பேராசிரியை முனைவர். கே. கண்ணாத்தாள் நன்றி கூறினார். பேராசிரியை சௌமியா நிகழ்ச்சியைத் தொகுத்து வழங்கினார். குறும்படங்கள் திரையிடப் பெற்றன. மாணவர்களின் கலை நிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

## கோவிலூர் ஆண்டவர் அருளிய
## சுபாநுவத் திருவாக்கு (தொடர்ச்சி)

(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)

**குருவை அடைதல் (சென்ற இதழ்த் தொடர்ச்சி)**

**VI குருபக்தி :**

1. "பத்தி உடைய அமரர்பெறும்
   பைம்பொன் னாட்டின் இனிதான
   சித்தி விளங்கும் காவிரிசூழ்
   செல்வப் பொருள்வை மாநகரோன்
   புத்தி இலனாம் எனதுபவம்
   பொருள்அது ஆகக்கொண்டு இனிய
   அத்துவிதத்தை அளித்த உகந்
   தானை வணங்கித் துதித்திடுவாம்" (66/101)

2. "..... சுகம்தனிலே மேலான சுகம்பரம
   சுகம் என்றே தோன்றக் காட்டும்
   உகந்தகுரு தேசிகனை அனுதினமும்
   இருதயத்தில் உட்கொள் வேனே" (65/99)

3. ".... இந்தஉயிர் மிடிஅகல வந்தகுரு சுவாமிஉன்
   இருபாத நிதி அருளலால் ....
   .... வந்த பிறவாத வகை அடியனுக்கு அருள்புரியும்
   வள்ளலே பரம குருவே ...." (91/139)

**VII குருசேவை :**

1. "ஏமநல் கிரியை வலம்செயும் கதிரோன்
   எழுவதன் முன்னமே எழுந்து
   சேமநீர் படிந்து செபித்துஉனைப் பரவும்
   செனனமே எனக்குநீ தருவாய் ...." (68/105)

2. "…. அண்டரொடு முனிவரரும் ஏத்தற்கு உரித்தான
அருளுருவ மான குருவுக்கு
அன்புஎனும் மலர்எடுத்து அர்ச்சனை நிதம்செய்து,
அடியிணைகள் போற்றி நின்று,
தொண்டர்என, அவர்ஏவல் எப்போதும் முடிசூடித்
துகள் அற்ற சித்தனாகி
தூய்தான குரவர், அவர்சித்தபரி பாகமது
சோதித்து அறிந்து பின்பு
கொண்டாடி, இவருக்கு, வானவரும் அறிவு அறிய
குறைவற்ற பொருளை ஈயக்,
குணமதுடன் வாங்கிஅதை இப்புருடர் ஆனவர்கள்
கோது இன்றி நின்றும் …." (45/73)

VIII குருவின் மேன்மை :

1. "…. சீருடைய சின்மயனை மேருஎன அசையாத
சித்தாந்தம் ஆன பொருளை
தீரஆள் தமக்குஉரிய மூடஆள் தமக்குஅரிய
சின்மயா னந்தவடிவை,
அத்துவித மானவனை எத்திசையும் நின்றவனை,
அணுவில் அணு ஆகினானைப்
பேராது இருந்தபரி பூரணம தாகின்ற
பேச்சற்ற மோனவடிவைப் …." (47/74)

2. "ஓயாத ஏழ்கடலும் ஈராறு சூரியரும்
ஒருசண்ட வாய்வும் ஒருகால்
உலகத்தில் வந்துஉறினும் அணுவும் கலங்காத
உறுதிஉள மேருஎனலாம் ….
…. காயாத சீதமுடன் வெம்மைஅது இரண்டையும்
கணியாது இருந்த அதனால் ….
…. மாயாத செல்வமதை எந்தனுக்கு அருள்புரிய
வந்தருளும் மோன குருவே …." (87/135)

5. "தெய்வ வடிவுஅறிந்து தேவதையைப் பூசைபண்ணித்
தெய்வ வடிவாம் திறம் கேளீர் - ஐயம்இல் நூல்
சற்குருவால் தான்உணர்தல், சந்ததமும் சிந்தித்தல்,
நிற்கும் அதுவான நிலை." (101/162)

6. ".... வேண்டிப் படியில் தொழும்தெய்வம்
விள்ளற்கு அரிய பேதம்; இவை
காண்டற்கு உரிய தெய்வம் அதைக்
காட்டும் தேவ தேவதையே" (70/108)

7. ".... என்னையும் ஓர் ஞானவடிவு ஆக்குவித்த
இறைவனடி நீடூழி வாழ்கவென்றே." (78/124)

பிற்குறிப்பு :

திருவாக்குகள் மற்றும் திருவாக்கியங்கள் என ஆண்டவரால் அருளப்பட்ட அனைத்துமே நமக்கு உபதேச மாதலால், அவற்றை மறுபடி ஒருமுறை இங்கு சேர்த்துக் கொள்ளலாம்.

குருவிடம் பாடம் கேட்பதே (சிரவணம்) உபதேசம் எனப்படுகிறது. இத்தகைய சிரவணத்தில் புரிதலும் அடங்கும். நூல்கற்றல் மற்றும் சத்சங்கம் மூலமாகவும் புரிதல் பெறலாம்.

குருவிடம் கேட்டதைக் திரும்பத்திரும்ப நினைத்தல் (மனனம்) மற்றும் தெளிதல் (நிதித்யாசனம்) ஆகியன வற்றால் கேட்டதைத் திடப்படுத்திக்கொள்ள / உறுதிபெற இயலும். இவைபற்றி இனிக் காண்போம்.

# கோவிலூர் திருக்கொற்றவாளீசர் அந்தாதி

(திருக்களர் ஆண்டவர் வீரசேகர ஞான தேசிகர் அவர்களின் மாணாக்கர் சுப்பையா அவர்களால் இயற்றப் பெற்றது)

சொல்களனில் ஏயகளமுந் தூய்சிரசில் பெண்இடபால்
நெல்லைமுகந்(து) ஓல்இடையின் நேரார்க்குத் - தொல்மாலார்
சஞ்சேர்க்குஞ் சம்புசல பிந்துசல சஞ்சம்பா
லஞ்சாலம் போனஅவன் உலா 35

உலாவித் திரிதேனோ ஒண்பசுவாம் ஓதேன்
நிலாகற் பகதருவோ நீள்கோ - நிலாஅணியாய்
சிந்தா மணியோ சிறுகல்லாம் என்றாலும்
வந்தார்க்(கு) உதவும் வளன் 36

வளமார் கருணையினல் வாரிதியாய் வாடா
உளவாற்றல் பூரணமா யுள்ளாய் - களவாணீ
யென்றாலுங் காட்சியினை யெற்கே னளித்திலைநீ
கன்றாத நெற்பெணின் கொண் கா 37

கால்இலியில் தண்மதியில் காள்என்பில் கங்கையினில்
வால்அடவைப் பால்நெல்லையின் வார்முலையின் - மேல்சியில்
கச்சம் பிரிய மசுசிசுசி கோரஞ்சம்
எச்சம்பந் தந்தானும் இல் 38

இல்லாள் மலைநீலி இந்தனயர் இன்(று)ஈன்பெண்
அல்லாது வேறுநினைப் பார்ப்பில்லார் - அல்லல்எனச்
சங்கரனே சங்கரனாய்ச் சந்யாசஞ் சார்ந்தக்கால்
இங்(கு)உரனில் நிற்பேண லேன் 39

ஏனோ இரக்கந்தான் என்பேரில் நிற்(கு)இலைதான்
வானோர் பணிகழனி வாளீச - நானோதான்
அன்(பு)இலேனா அன்(பு)இலனேல் அன்பதனைத் தந்துநிதம்
என்(பு)உருகப் பாடவரம் ஈ 40

ஈஎன்றே காட்டி இவண் ஈர்பதினா(று) ஏர்எயிறை
ஈஎன்றால் ஈவாயோ ஈர்வாளோய் - ஓய்உளம்ஆய்
நின்உருவத் தேநின்றால் நீஅருள்வாய் ஆதலினால்
அன்னவணம் செய்வான் அருள். 41

ஈஎன்றே காட்டிஇவண் நீர்பதினா(று) ஏர்எயிறை
ஈஎன்றால் ஈவாயோஈர்வாளோய் - ஓய்உளம்ஆய்
நின்உருவத் தேநின்றால் நீஅருள்வாய் ஆதலினால்
அன்னவணம் செய்வான் அருள் 41

அருளே திருஉருவா மாரிஅனார்க்(கு) ஏவல்
புரியாது நெஞ்சகம்இப் பூமீ - தருமால் உற்(று)
ஓடி உழுன்றிடுமால் ஓடா(து) அருள்புரிவான்
வாள்திருடும் வண்மையனே வா 42

வாளா வனையுவதி வாளாயான் வந்த(து)அலால்
மாளாத காதலியை மாய்த்துன்றான் - வாளீச
சித்(து)உருவை யேநினைந்து சித்(து)உருவே ஆயிலன்ஓர்
சத்(து)உரு(வு)என் சித்தமே தான் 43

தானே அலதுசக சீவபரம் சற்றும்இலை
ஏனோ அறிந்தும் இடர்கின்றேன் - கோன்அசியாய்
நின்அருள்சற்(று) இல்லையதே நின்மலனே காரணமாம்
பன்னுகுடம் போல்அதிலே பால் 44

பாலேமதுரமதாம் பற்றிவிடில் சர்க்கரையை
மேலே விளம்பல்எவன் மின்வாளோய் - போலேகேள்
நின்னை நினைத்தலதே நின்மலமா நேர்துதியேன்
நன்னயத்தை என்சொலுவேன் நான் 45

நானே அசுசிஎனில் நன்(கு)ஆமோ என்பாரம்
கானார் கசடன்எனில் கட்செவியென்று - தேன்ஆறோய்
என்னை இகழாதேஇன் அருள்தந்(து) ஆளுதியேல்
உன்னதிஉற்(கு) உண்(டு)எனவே உன் 46

உன்னை அல(து)ஒன்றை உன்னேனே இந்நாயேன்
என்னை நினையானை ஏசலேவா - மன்அசியாய்
சென்னியால் என்றதனைத் தீரமறந் தாய்கொல்நீ
சென்னிஆ(று) ஒன்(று)உடையாய் செப்பு 47

செப்பிடிலோ நின்சரிதம் சித்திரமாம் கொற்றேச
திப்பியவை ராகியுமாம் சேராகி - முப்பிரிவேல்
கொண்டு நிராமயனாங் கொண்டும் பலியதனை
அண்டு மகேச்சுரனா மால் 48




ஆலநிழல் கீழேயாம் ஆச்சரியம் கண்டோமே
சாலமிகப் பாலியர்இச் சாயகனார் - கோலமிகும்
சிட்டர்களோ சீர்க்கிழவர் செப்பிடலோ மானமொழி
கெட்டவராம் ஐயம்அதைக் கேள் 49

கேளும் திருநெல்லை கேள்வனே ஒன்(று)உரைப்ப
வாளின் திருட்டில் வழக்கெடுக்கின் - நாளைபினைப்
பொல்லாத பொய்ச்சான்று போடில் வருகின்றேன்
வல்லை எனக்கருள வா 50

வாரா விடினும் வளநெல்லை நற்றாய்க்காய்ச்
சாரா(து) உரைப்பேன்அச் சான்(று)அதனைத் - தீரமுடன்
நீஅருளா(து) ஏகிடினும் நெல்மா நினையாளோ
தாய்மனமும் கல்லாமோ தான் 51

தானே விளையாடத் தன்சங்கற் பத்தாலே
வானே முதலாய் வகுத்த(து)அலாற்(கு) - ஏனம்உளாய்
உண்டோ சிறிதேனும் ஓதாய்எம் கொற்றேச
மண்தான்நன்(று) இக்குடத்தின் மாண் 52

மாணார் மனோலயத்தை மா(சு)அற்றார் மன்னிடயான்
பூணார் அரிவையர்தம் போகத்தை - வீணேதான்
நாடி உழன்றேனே நம்கொற்ற நாதாகாற்
றாடி எனஎற்(கு) அருள் 53

அருளே அவயவமா மாகாகா நாடாத்
தெருளே திருவுருவம் தேரீர் - பொருள்ஓதுங்
கொற்றேசர்க்(கு) ஆதலின்இக் கோள்மனமாம் வெம்பகைஅற்(று)
உற்றோரே பற்றார்பற் றோர் 54

ஓர்கொம்(பு) உடையனே ஓர்உருவாய் இங்(கு)உற்றுப்
பார்கொற்ற நாதனைநீ பாங்(கு)என்றான் - நேர்கொளுவீர்
பார்த்தேனே பார்த்தளனைப் பற்றிச் சுகோததியில்
ஆர்த்தானே அந்தோ அவன் 55

அவனே இவன்ஆம் இவனே அவனாம்
சிவனே இவையாவுந் தேரீர் - பவநோய்அற்
றார்வாளி தீக்கானில் ஆடும் பொருள்ஈதே
பேர்வாழி சொல்லிருப் பேம் 56

பேம்அற்றோம் நாம்அளவில் பேர்அற்றோம் அற்றோம்என்
னாம்அற்றோம் கொற்றேசர் நாடுற்றே - ஓமுற்றார்க்(கு)
என்றும் பணிசெய்வோம் ஏமாறோமே உலகின்
முந்துன் பிணிஅடைவோமோ 57

மோதப் பெருங்கடலே மும்முலையாள் நாயகனே
ஓதப் பெரி(து)அருளும் உண்மையனே - கோ(து)அற்ற
முத்தீசன் போற்றும் முளரிப் பதத்தோனே
சத்(து)ஈவானோ எற்குத் தான் 58

தானேஉல(கு) அன்றிச் சத்தியமே சத்தியமே
ஊனார் சிறிதிலைமற்(று) ஓர்வீர்நீர் - கோன்அசியோன்
நன்நகரில் வீரேசன் நாயேற்(கு) உரைத்த(து)இதே
எந்நகர்க்கும் எட்டா(து) இதே 59

தேவாதி தேவன்இவன் தென்கழனி வாள்ஈசன்
காவார் வனிக்கானைக் காதலிமின் - ஓவாதே
தன்மயமே ஆகித் தணர்ந்தே பிணமதியை
இன்மயமே யாகிடு வீர் 60

*(தொடரும்...)*

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**